5th September 1960]

(*b*) As the panchayats to be formed after bifurcation cannot function as viable economic units, and as Pazhavoor Panchayat was reconstituted only in July 1957 the question of bifurcation of the panchayat has not been pursued.

*Hand-made paper*

* 422 *Q.*— **Sri M. P. SARATHI :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

1960-ல் இந்த ராஜ்யத்தில் " **Hand-made paper unit** "-களின் உற்பத்தி அளவு எவ்வளவு ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

**Sri M. P. SARATHI :** கையினுல் செய்யப்பட்ட காகிதத்தின் விலை மதிப்புதான் பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. உற்பத்திக்கான செலவு குறிப்பிடப்படவில்லை. உற்பத்திக்கான செலவு விவரமும், அந்த யூனிட்டுகள் எந்த எந்த இடங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன என்ற விவரமும் சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** தனியாகக் கேள்வி போட்டால் கனம் அங்கத்தினர் கேட்ட விவரங்களெல்லாம் கொடுக்கலாம்.

**Sri A. VEDARATHNAM :** அரசாங்க யூனிட்டுகள் மூலம் உற்பத்தியான காகிதத்தைப் பற்றிய விவரம் தான் மேஜை மீது வைக்கப் பட்டிருக்கிறது. இதைப்போன்று தனியார் துறைகளிலும் கையினுல் செய்யும் காகிதங்கள் நிறைய உற்பத்தியாகின்றன அல்லவா ? அதனுடைய விவரமும் தயவு செய்து அமைச்சர் அவர்கள் அறிவிக்க முடியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அந்தப் புள்ளி விவரம் கிடைப்பது அவ்வளவு சுலபம் அல்ல. இருந்தாலும், கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால், நான் பார்த்து பதிலளிக்கிறேன்.

**Sri C. NATARAJAN :** தலைவர் அவர்களே, கையினுல் காகிதத்தை தயாரிப்பதற்கும் மில் மூலமாகத் தயாரிப்பதற்கும் உற்பத்திச் செலவில் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது ? கையினுல் உற்பத்தி செய்யும்போது எவ்வளவு அதிகம் செலவாகிறது என்ற விவரத்தை அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** விலை அதிகமாக இருந்தாலும் காகிதம் நல்ல காகிதம் ; நீண்ட காலம் இருக்கும் காகிதம் ஆனுல், எவ்வளவு அதிகச் செலவு ஆகிறது என்ற விவரம் என்னிடம் இல்லை.

**Sri A. GOVINDASAMI :** கையினுல் செய்யப்பட்ட கடுதாசியின் மீது எழுதும்போது " நிப் " காகிதத்தைக் கிழிக்கும் நிலைமையும், காகிதம் நிப்பைக் கெடுத்துவிடும் நிலைமையும் ஏற்படுகிறது. அதைத் தவிர்ப்பதற்கு உயர்ந்த ரகக் காகிதம் உற்பத்தி செய்ய அரசாங்கம் முயற்சிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** கையினுல் செய்யப்படுவது அல்ல அதற்குக் காரணம் ; காகிதத்தின் தரத்தைப் பொறுத்தது அது. மில்லில் உற்பத்தியாகும் காகிதமானுலும், தரம் குறைவாக இருந்தால் அதிலும் இந்தக் கோளாறெல்லாம் ஏற்படும்.

---

[a] Printed as Appendix IV on page 116 infra.